உ

பரமபதிதுணை.

# தமிழ்ப்பேரகராதி.

இஃது

யாழ்ப்பாணம்-ஸ்ரீலஸ்ரீ.


## ஆறுமுகநாவலர் அவர்களின்

மாணாக்கரின் மாணாக்கரி லொருவரும்,

சைவசித்தாந்த சஞ்சீவினிசபைப்

பிரசாரகரு மாகிய

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி

வித்துவான்

## நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள்


ஷை யூர் விரிவகராதி முதலியவற்றிலுள்ள சொற்களுடன்

அநேகநூதன சொற்பொருட்டொகையாதி யவற்றையுஞ் சேர்த்துப்

புதுக்கியுந் திருத்தியும் விளக்கியதை;


பிருங்கிமாநகரம்

வேம்பிலிமுதலியாரவர்கள் குமாரர்

## நமசிவாயமுதலியாரவர்களால்

தமது

நிரஞ்சனிவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை-சூளை-அவதானம்பாப்பையர்வீதி. நெ. 88.

**1901**

# சூசிபத்திரம்.





இவ்வகராதி மணிகடற்சுலவிம்மாநிலவலைப்பில், தமிழ் மொழியை பயில்வோரனைவர்க்கு மின்றியமையாச் சிறப்பினதாய், இதுகாறும் வெ படுத்தப் பட்டிருக்கிற, சதுரகராதி, யாழ்ப்பாணத்துமானிப்பாயகராதி, வகராதிமுதலிய வகராதிகளில் அடங்கியிருக்கிற சொற்களோடு நூதன... அரியபெரிய விலக்கிய இலக்கணங்களினின்றும் எடுக்கப்பட்ட வநேகஞ் சொற்களை முறைப்படி சேர்த்தும், அவ்வாறுசேர்க்கப்பட்ட சொற்களுக்கு, ஆங்காங்கு (*) நட்சத்திரப்புள்ளிக ளமைத்தும், பெயரகராதியில் பெய ரெச்சம், வினையெச்சம், வினை முற்று, ஏவல் வினைமுற்று, வியங்கோள் வினைமுற்று, குறிப்புவினைமுற்று, உரிச்சொல் முதலிய வேறுபாடுகளை மாண வர் எளிதிலுணருமாறு அடியிற்குறித்த குறியீடுகளமைத்தும் வெளியிடப் பட்டது.

| | |
|---|---|
| பெயரெச்சம். | † |
| வினை யெச்சம். | $ |
| வினை முற்று. | ‡ |
| ஏவல் வினைமுற்று. | o |
| வியங்கோள் வினைமுற்று. | ¶ |
| குறிப்புவினை முற்று. | ÷ |
| உரிச் சொல். | ֍ |



உ

புதுச்சந்நிதிக்கந்தன் றுணை.

# சிறப்புப்பாயிரம்.

தஞ்சாவூர், சதாவதானம்

## பிரமஸ்ரீ. சுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பூவிலிடை கடையாதி யெழுத்தின்முன்பே ருறப்பதித்த புத்த கங்கள்
யாவுமிடை கடையனவே யாழ்ப்பாணப் புலோலிநக ரினன்மா சீர்த்தி
பாவுபுதுச் சந்நிதியா னருட்கதிரை வேற்புலவன் பதித்த மேன்மை
மேவுமக ராதியிதே முதலதெனற் கிதன்பெயரே விளக்கு மன்றே.

## ஆறுமுகநாவலர் அவர்கள் மாணாக்கரும்,

இந்நூலாசிரியரின் ஆசிரியர்களுள் ஒருவரும்

ஆகிய,

யாழ்ப்பாணத்து நல்லூர்

மகாவித்துவசிரோமணி

## ஸ்ரீமான். கா-தியாகராசபிள்ளை அவர்கள்

இயற்றியது.

கலிவெண்பா.

நீரேறு மேறேறு நின்மலத்து மெய்ப்பொருளே
சீரேறுந் தன்பெயராற் செய்யியலாற்-பாரேறத்
தெய்வப் பலகையினிற் சேர்தலாற் சேயுடனே
வையகத்திற் சேர்ந்து வளர்த்தலான்-மையிறவப்
பொய்யடிமை யில்லாப் புலவர்களுந் தாலாட்ட
மெய்யியலி னின்றோங்கி மேவலா-னையனையுந்
தன்னை மணந்தார்க்குத் தக்க தொழும்பாக்கி
யின்னயங்க ளற்புதங்க ளீத்தலாற்-றன்ன துணை
யாரியத்தை நாடாதிங் கண்ணியுநீஇத் தன்னிசையை
யாரநட மையன்செய வாக்கலால்-வாரிகுடித்

திட்டவனும் வேங்கடத்தெ மிட்டகுல சாமியினன்
மூட்டிலருள் வாய்ந்ததனை முட்டுதெலான்-மட்டில்வா
யில்லாத வாரியத்து முன்னையளுக் கேலாத
சொல்லிலக்க ணம்புணர்ச்சி தொட்டசெய்கை-நல்லதிணை
யாக்கும் பொருட்டுறையு மார்குறியுங் கல்லுருகும்
பாக்க ளிலக்கணமும் பல்குறிப்பு-மாக்கமெனித்
தொல்லணிகள் கொண்டிருக்குஞ் தோற்றத்தான் மற்றைமொழி
யெல்லவற்று மேலா யிருக்குதனிச்-சொல்வினிமை
யுள்ளாற் றமிழெனும்பே ரொள்ளணங்கைக் கண்டவர்க
ளுள்ளார்க ளிவ்வுலகில் யாருளரோ-கள்ளமிலா
வம்மொழிசேர் சொற்பொருளை யத்தொகையை முந்துபல
செம்மைநூல் கண்டுநல்ல சித்தாந்த-மெய்ம்மையவை
வேதாந்த வுண்மையினும் வேண்டுவிட யங்கள்செறீஇ
நாதாந்த முங்கடந்த நற்பொருளா-யோதவொணுச்
சிற்பரத்தின் றன்னடியுந் திருநீறுங் கண்டிகையும்
பொற்பமரு மஞ்செழுத்தும் புந்தியினி-னிற்கவைத்தோன்
கற்றவர்க்குத் தானினியன் காசினியிற் சென்னையைச்சார்
நற்பிருங்கி யாநகரி னண்ணுவோ-னித்தக்
கமத்தொழிலி னற்குலத்தான் வேம்பிலிவேள் காலி
னமச்சிவா யக்குரிசி னடி-யமர்ந்தேற்பச்
சேதா வெனக்கனிந்து தெண்டிரைசூ ழிவ்வுலகின்
மேதா வியர்வியக்க வைத்தவனை-யோதுவமெத்
தத்துவத்தும் மேலாகித் தனிப்பொருளா யெங்குநிறை
யத்துவா மூர்த்தியுமா யாண்டருளெங்-கத்தகந்தன்
மேலைப் புலோலி விளங்குபுதுச் சந்நிதிவேள்
காலைக் கமலமலர் காண்சிரத்தன்-மாலைக்
குவளையுடை வேளாண் குலத்தவனு கப்ப
தவராச னற்புதல்வன் றன்னு-ளவமிலான்
நம்பா விலக்கியமு நல்லிலக்க ணங்கலைக
ளும்பர்புகழ் சித்தாந்த மொண்டருக்கந்-செம்பொருளார்
நன்னூல்க ளும்பயின்று நாத்துலங்கு மொண்புகழி
னென்றூல்க ளும்போதித் தேன்றுரைத்து-மன்னிவளர்
சொற்போதங் கண்ட தொருகதிரை வேற்பிள்ளைப்
பொற்போதங் கண்டோன் புவி.

---

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

வைதிக சைவ சுத்தாத்துவித சித்தாந்த பானுவாகிய

## அ-குமாரசுவாமிப்புலவர் அவர்கள்

இயற்றியது.

நேரிசை யாசிரியப்பா.

சீர்பெறும் * வேங்கடச் சிலம்பின் றென்பா
லேர்பெறு நிலத்தி லியல்பெற வழங்குஞ்
செந்தமிழ் மொழியிற் செய்யு ளாகத்
தந்த நூல்களிற் சார்ந்து கிடக்குந்
திரிசொ லெல்லாஞ் செவ்விதி னுணர்த்தும்
விரிசொற் பிங்கல மேம்படு திவாகர
மாதிய நூல்கற் றறியா மாந்தரு
மேதியல் படாமே ¶ யிலாவகத் துணர்தர
நல்வழி யிதுவென நவின் றொருசிலர்
பல்வகைப் படுசொற் பற்பல தேடி
யகர மாதியா வணிபெற நிறீஇப்
பகர்தரு பொருளொடு பகிர்முக மாக்கின
ரவற்றொடுங் கூடி யரும்பயன் கொடுப்ப
வெற்றினு மிக்க வியலிசை நாடகச்
சங்கப் பலகையிற் சார்ந்துவீற் றிருந்த
சங்கப் புலவர் தலைநா ளியற்றிய
புறநா னூறு போக்கரு நல்லகத்
திறநா னூறு திருமுரு காற்றுப்
படைமுத லாய பரப்பமை நூலினு
நடைபெறு பரத நவிலிசை நுணுக்கங்
சிந்தா மணியெனக் கற்றோர் கைக்கொளுஞ்
சிந்தா மணியொடு சிலப்பதி காரங்
காசிலா மணிமே கலையே குண்டல

---

* "வடதிசை மருங்கின் வடுகுவரம் பாக,, என்று சிறுகாக்கைபாடினியார் கூறியாங்கு வடக்கட் பிறவெல்லையு முளவாக ஈண்டு வேங்கடச் சிலம்பை எல்லையாகக் கூறியது, சகத்தின் மிகுத்த தவத்திற் சுதித்தஅகத்தியனார்க்குத் தமிழைச்செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள் வரைப்பென்னு மியைபு பற்றியென்க. நிலங்கடந்த நெடுமுடியண்ணலை நோக்கி உலகந் தவஞ்செய்துவீடுபெற்ற மலையாதலானும், எல்லாராலும் அறியப் படுதலானும் வேங்கடம் எல்லைத்து,, என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

¶ இலாகவத்து=இலகுவின்.

கேசி முதலர்க் கிளக்கு நூலுளும்
பின்னுள நூலுளும் * பெறலருங் குரைத்தெனை
விந்நிலம் புகல வியற்று முயற்சியி
‡ னிலைப்புரை கிளைத்திட் டெடுத்துள சொற்களைப்
புலப்படத் தீட்டிப் பொருள்பெறக் காட்டிப்
புத்தக மாக்கிப் புவியிடை நாட்டினன்
வித்தக விற்பனர் விருப்பமீ தூர
விருந்தமிழ் வளரும் யாழ்ப்பா ணத்திற்
பொருந்திய மேலைப் புலோலி வாசன்
மேதினி வளமிக மிகப்புகழ் படைக்குங்
கோதில்வேளாளர் குலப்பிர காச
னுகப்ப பிள்ளை நற்றவ குமார
¶ னேகப்ப பிள்ளை யிரும்பத நேச
னிலக்கிய விலக்கண மெவையுங் கற்றோ
ரலக்கணற் றறிதரற் ० காமவ காசன்
கற்றவர் கொள்ளுங் கவிப்பிர வேசன்
பற்றினர்க் கினிய பண்டிதன் கதிரைவேற்
பிள்ளை யென்னும் பெயருடை
வள்ளிய கீர்த்தி மாட்சிமை யோனே.

புரசை அட்டாவதானம்,

சபாபதி முதலியாரவர்கள் மாணக்கராகிய

## வித்துவான் திரு - சண்முகம்பிள்ளை அவர்கள்

### இயற்றியன.

#### நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா.

கார்பூத்த கறைபூத்த களத்திறைவன் கரம்பூத்த
வேர்பூத்த சிலைக்கோட்டி னிரண்டொன்றி னென்றுகும்
பேர்பூத்த முக்கோணப் பெருவரைதன் னிடங்கொண்ட
சீர்பூத்த வீழமெனச் சிறந்தோங்கு நன்னாட்டில். (க)

மலையோடு வேல்விடுத்த வயங்குகுமா ரப்பெருமான்
கலையோடு நீர்முடித்த கடவுடரு மொருமதலை
சிலையோடு பொருதவிழித் தெரிவையரொ டமர்ந்தோங்கு
நிலையோடு பல்சிகரி நிலாமேலைப் புலோலிதனில். (உ)

---

* பெறல் அருங்குரைத்து=பெறுதற்கரியது. ‡ இலைப்புரைகிளைத்தல்= தேடுதல். ¶ ஏகப்பபிள்ளை=ஏகம்பன்பிள்ளை; குமாரக்கடவுள். ஏகம்பன்-வலித்தல் விகாரம். ० அவகாசம்=வல்லமை.

தொண்டர்புரா ணம்விரித்துச் சொல்லியசே வையர்பெருமான்
மண்டனில்வந் தவதரித்த வளங்கெழுநன் மரபுளுற்று
மெண்டருமெய்த் தவமீதென் றெடுத்துரைப்பத் தோன்றினனாற்
பண்டைமலத் திமிரம்பாற் றிடவொருபா வலனம்மா. (௩)

அனையன்யா ரெனினறைவ னருந்தமிழிற் காகரமாத்
தனையனைய புலவரெலாந் தகவுரைக்கும் வழுதியுளங்
கனிவினுரை செயுங்கூர்மங் கருத்துணர்ந்திங் குரைசெய்வோ
னெனையாளு மெய்கண்டா னிதமததா பனநிபுணன். (௪)

உபயகதிர் காமமெனு முன்னுபுதுச் சந்நிதிவே
ளபயனுரை கொண்டுபுக ழமைத்தபிரா னுண்மலரா
முபயபதம் பழிச்சிடுநல் லுரவோனங் கதிரைவேற்
சுபமலிநா மப்புலவன் றெடுகெடனீர் வைப்பினரோ. (௫)

முன்னகரா தியிற்சிலவர் முன்னியெடுத் திடுமொழிக
ளன்னவருந் தமிழ்ச்சங்க நூன்மொழிக ளமையாமை
யுன்னியவை யொருங்கெய்த வொருசேரத் தொகுத்தளித்தா
னின்னதற்குக் கைம்மாறிங் கேழையேன் செயற்பாற்றே. (௬)

இன்னநூல் பல்லாண்டு நிலவிடுக வெவ்வெவர்க்கும்
பன்னுகுரு வெனப்பொலிக பாரின்மே லிதுபுகழு
நன்னரெலா மோங்கிடுக நயவஞ்ச ரிலராக
வின்னவனெங் கந்தமுரு கின்னருளால் வாழ்கவுகம். (௭)

---

திருவாவடுதுறையாதீன மகாவித்துவான்
மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களின் மாணாக்கரும்,
தில்லைவிடங்கன் வித்துவான்
மாரிமுத்துப்பிள்ளை அவர்கள் பௌத்திரரும்,
காஞ்சிபுரம் பச்சையப்பமுதலியார் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதரும்
ஆகிய

## தி. சு. வேலுசாமிப்பிள்ளை அவர்கள்

இயற்றியன.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சீர்பூத்த சீவகசிந் தாமணியே முதலாய சிறப்பு வாய்ந்த
பேர்பூத்த பற்பலநூல் பிறங்கிசைநூல் பரதநூல் பிறநூ னின்று
மோர்பூத்த புதுமொழிக ளெடுத்தமைத்துத் தத்துவமா வியலி னோடு
கார்பூத்த சித்தாந்த நலவிடய நிலவுறவே நயப்பிற் காட்டி. (௧)

வணங்கிநின் றேத்தக் குருமொழி வைத்தோ
யோமெனு மெழுத்திற் பிரமம் பேசிய
நான்மறை விதியை நடுங்குசிறை வைத்து
தாதையு மிரப்பத் தளையது விடுத்தோய்
குறுமுனி தேற நெடுமறை விரித்தோ
யாறுதிரு வெழுத்துங் கூறுநிலை கண்டு
நின்றாட் புகழ்நர் கண்ணுட் பொலிந்தோய்
மணிக்கா லறிஞர் பெருங்குடித் தோன்றி
யிறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப்
பெருந்தமிழ் விரித்த வருந்தமிழ்ப் புலவனும்
பாய்பா ரறிய நீயே யாதலின்
வெட்சிமலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்
குழந்தை யன்பினொடு சென்னிதலைக் கொள்ளுதும்
அறிவுநிலை கூடாச் சின்மொழி கொண்டு
கடவுட் கூறா வுலவா வருத்தியுஞ்
சனனப் பீழையுந் தள்ளாக் காமமுந்
தற்படு துயரமு மடைவுகெட் டிறத்தலுந்
தென்புலக் கோமகன் றீத்தெறு தண்ட
நரகொடு தூறக்கத் துழல்வரு பீழையு
நீளா திம்பரின் முடித்து
மீளாக் காட்சி தருதியின் றெனவே. (உ)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே
யறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம். (௩)

தடவரை முனிவ னீன்ற தமிழ்க்கொழுங் குழவி தன்னைப்
படர்வெயி லுமிழுஞ் சங்கப் பலகையாந் தொட்டி லேற்றி
நடைவர வளர்த்து ஞால நனந்தலை மறுகின் விட்ட
மடனறு புலமை யோரை மனத்தியா நினைத்து மன்றே. (௪)

பஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா

இவையிரண்டும் ஆறடித்தரவு.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதின்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்.

அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்புமுற
வெத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே !

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
ரெல்லையறு பரம்பொருண்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்.

கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவு
முன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்

ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே.

இவை பன்னிரண்டுந் தாழிசை.

கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடிற்
றொடுகடலை யுனக்குவமை சொல்லுவதும் புகழாமே. (௧)

ஒருபிழைக்கா வரனார்முன் னுரையிழந்து விழிப்பாரேல்
வரியதுன திலக்கணமென் றறைவதுமற் புதமாமே. (௨)

சதுமறையா ரியம்வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழிநீ யநாதியென மொழிகுவதும் வியப்பாமே. (௩)

வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலநதி நினைக்கரவாக் காரணத்தி னற்குறியே. (௪)

கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ வம்பலத்து
ளுடையாருன் வாசகத்தி லொருபிரதி கருதினதே. (௫)

தக்கவழி விரிந்திலகுஞ் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலஞ் சிறந்தவுன்றன் மெய்ச்சரித வியஞ்சனமே. (௬)

வடமொழிதென் மொழியெனவே வகுத்தவிரு விழியவற்றுட்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராரோ, (௭)

வீறுடைய கலைமகட்கு விழியிரண்டு மொழியானாற்
கூறுவட மொழிவலமாக் கொள்வர்குண திசையறியார். (௮)

கலைமகடன் பூர்வதிசை காணுங்கா லவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார். (௯)

பத்துப்பாட் டாதிமனம் பற்றினோர் பற்றுவரோ.
வெத்துணையும் பொருட்கிசையு மிலக்கணமில் கற்பனையே. (௧0)

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்க
ளுள்ளுவரோ மநுவாதி யொருகுலத்திற் கொருநீதி. (௧௧)

மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென் றுருவேத்திக் கண்மூடிக் கதறுவரே. (௧௨)

அதனால்,

நிலைமண்டில ஆசிரியப்பா. இணைக்குற ளாசிரியப்பா.

இன்னன வியல்செறிந் தென்றுமோர் படித்தாய்
மன்னிய தலையிடை காலெனு மூன்று
வுறுப்புக ளணிநலன் சிறக்கவு முடையை
மறுப்புக் கிடனிலா திருவென வயக்கற்
கன்றரன் குமர னகத்தியன் கீர
னென்றிடு தலைவரு மெழிற்புல வோரு
முச்சங் கத்தையு முத்தமி ழவற்றையு
வைச்சன ரதனுன் மன்னினை மாதோ
நின்னேண் ணிளக்க நன்னயக் குறுமுனி
தன்னினு மியலா துன்னுடை யளவை
முற்றக் காண்குந ரெங்கணு மென்று
முற்றவ ரிலர்முற் றிறைவனே யன்றி
யாகலிற் றமிழ்மொழி யரசே கேட்டி
யேகனைப் போல வளவிகன் றிலகுவை
யதனுல் நின்னைக்
காணவு மறியேன் காட்டவு மறியேன்
பேணவு மறியேன் பெரிய நின்னியலு
ளெழுத்து மறிகிலன் சொல்லு மறிகிலன்
பழுத்த பொருள்பா வணியுந் தெரியேன்
நார்மல ரடுப்பி னன்மண முறுமே
பார்பர வுன்னைப் பணிந்தன
னிவ்வக ராதி யினிதுறற் பொருட்டே. (ரு)

தமிழ்த் தெய்வவணக்கம் முற்றிற்று.



## தமிழ்ச் சிறப்பு.

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்றருவேன்—கோலஞ்சேர்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா. (க)

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ. (உ)

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றே. (௩)

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்ட பாலனை யழைத்ததும் எலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர். (௪)

கன்ம ரக்கலஞ் செய்தது மேலொரு கனலின்
மன்னி நின்றதுஞ் சூலைமாற் றியதுமோர் மதமா
முன்னஞ் சுற்றிவீழ் வித்தது நீற்றறை முளியா
துன்னச் செய்ததுந் தமிழ்மொழி யன்றிவே றுளதோ. (௫)

இறந்த பாலனை யெழுப்பின தெழில்வழு திவெப்புப்
பறந்து முன்னர்ப்போ னின்றது பனைமறு பனையாச்
சிறந்தி லங்கிட வைத்தது ஊமப்பெண் டிருவாய்
திறந்த தித்தமிழ் மொழியலா தெம்மொழி செயுமே. (௬)

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்க வந்துவந் தாடுவா ளுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காற்றிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே. (௭)

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரோ கணித்தறிவார். (௮)

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள். (௯)

பெண்ணை நீரினைப் பானறு நெய்யெனப் பெருக்கி
யுண்ணச் செய்தது மம்பல முடையவ னொருவன்
வண்ண மாங்கர மலரொழு திடமுகம் வரைய
வெண்ண நின்றதுந் திரவிட மென்னிலே திணையே. (௧௦)

வழக்கின் றிப் போழ்தின் மறைந்துறையு மாரியத்தா
ளழிக்கப் படாத்தமிழை யண்டிச்—சுழித்தெழுதப்
பட்டாள் கரியாள் பயின்றாண் மெதுவினிமை
யுற்றா ளிடையுரைக்க வும். (௧௧)

தமிழ்ச்சிறப்புமுற்றிற்று.



# பதிப்புரை

## செந்தமிழ்ப் பரமாசாரிய வணக்கம்.

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*கடலுறு முலகத் துறுமுயிர் மலவற் றபகரு ணைக்கண் டருவானை*
*யடலுறு மயிலைக் கரமெடு குமரக் கடவுளை யண்ணற் பிடிமானைத்*
*திடமுற வொருபா னிறுவிய தமிழின் றிருமுத லக்குரு வெனுதேனைத்*
*தடபுது நிதியோ டெனதுள மகல்வின் றமர்வரு முன்னைச் சரணேனே.*

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*ஒருமயிலைப் பதத்தினில்வைத் தொருமயிலைக் கரத்தினில்வைத் துலகமீன்ற*
*விருமயிலைப் புறத்தினில்வைத் தெனுமயிலைத் தமிழ்மயிலை யிகத்தேவைத்து*
*வருமயிலைத் திருமயிலை யுருவாக்கி யெனதகத்தை வளவா வைத்த*
*பெருமயிலைக் கொளுபுதுச்சங் நிதியானைத் தொழும்பேறு பெற்றேனனே.*

*இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரெனச்சிலவரியம்பாநிற்பா ரொருமொழிக்குப் பொருள்கேட்டன் றுணர்ந்தனர்நந் தியங்கடருமோர்ந்த ரொன்று,வருமொழிக்குச்செவிகொடுத்தாரல்லரவர்தனிமொழிக்குமானவாதிக் குருமொழிக் கென்னுடையபரம் பொருட்குகனேயுரியனெனக்கொண்டேன் யானே.*

---

*அநாதி மலமுத்த பதியாகிய சிவபெருமானிடத்துத்தோன்றி, சங்கப் பலகையிற் கிடந்து, தவத்திற் சிறந்த அகத்தியனாதிய செந்நாப் புலவரொ டுஞ் செவிலிகளாற் போற்றப்பட்டு, வையை யேட்டிலே தவழ்ந்து, பூவுல கெங்கணும் பொலிவுற நடந்து, பொருளணியாதிய விலக்கணங்கள் பொருந்த வளர்ந்து, முதிரா நிலைமையி னென்றுங் கன்னியாநின்று, புலவர் நாவினை மணந்து, அறம் பொருளின்பம் வீடென்னு மரும் பொருணான்கையும் பயந் து நிலவா நிற்பது அமுதினுமாற்ற வினிய தமிழேயாம்.*

*இனிமைப்பொருள் கொடுக்குந் தமிழ் என்னும் பண்புப்பெயர் ஆகுபெ யராய், அதனை யுடைய சொல்லை யுணர்த்தி நிற்கும் என்ப. இங்ஙன மன்றி இமிழ் குமிழ், சிமிழ் என்பனபோலத் தமிழ் என்னுஞ் சொல்லையும், தமிழ்பகு தி, ழ்எழுத்துப்பேறு எனக்கொண்டு, தனிமையான மொழிஎனப் பொருள் கொள்வதுமாம். இவற்றுளே செந்தமிழ் மொழித்தேவ நங்கையானவள் சிங்*

ளம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம் என்னுந் தற்சூழ்ந்த அயன் மொழிமாதர்களினும், ஏனைய அநாரிய பாடைப் பேதையர்களினுஞ் சிறந்தவள் என்பதும், சிவபெருமானும், முருகநாதனும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும் இவருள்ளிட்ட ஏனைய பொய்யடிமை யில்லாப் புலவர்களுஞ் சங்க மிருந்து வளர்த்தமையானும், அநேக அற்புதங்களை விளைத்தமையானும், இறைவன் றன்பெயரை நாட்டி யகப்பொருளியலை யளிக்கப் பெற்றமையானும், எழுது மறையாகிய தேவாரதிருவாசகங்கள் என்னும் அருட்பெரு வேதங்களை யுடைமையானும், முற்பட்டுத் தோன்றியதாய இயலிசை நாடகமென்னும் முத்தமிழியலு மொருங் குணர்த்து மகத்துவமுடைய அகத்திய முதனூலிலக்கணத்தையும், அதன்வழித்தாய தொல்காப்பிய முதலிய வேனைய வழி சார்பு நூல் இலக்கணங்களையு முடைமையானும், உத்தரவேதம் என்னும் விந்தக உத்தரீயம் விளங்கப்பெறுதலானும், வடமொழிக்க ணில்லாத புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல் லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி, உழிஞை, முல்லை, வாகை, தும்பை முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பாமுதலிய செய்யு ளிலக்கணமும், இன்னோ ரன்னவைகளையுந் தனக்கே சுதந்தரமாகப் பெற்று விளங்கலானும், தன்னுடன் றோன்றி விளங்கும் ஆரிய முதியாளினு முயர்வுடையளென்பதும் விளங்கும் பெற்றியதாம். இங்ஙனமாகவுஞ் சம்ஸ்கிருத மொழியினின்றுந் தமிழ்மொழி பிறந்ததென்று முழங்குவாருஞ் சிலர் உளர். மூஞ்சி முதலாவியலுறுப்பும், வாயிசையும், கானடமும்பெற்று, சொற்பொருண் மலிந்து இனிமை விளங்கும் பலவளனுநீடு, முக்கட்கடவுளும் முருகநாதனுநியருந் தந்திருவாயாற்புகழவும், சிற்றம்பல முடையார் தந்திருக்கரத்தாற் றீண்டவும் பெற்றதெய்வம், வாயில்லாவடமொழியாள் வயினின்றும் வந்துலவுவ ளென்பது சாலவும் வியக்கத் தக்கதே.

"நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்" என்னுஞ் சிலப்பதிகாரச் செய்யுட்கண் "முதலூழி யிறுதிக்கண் தென்மதுரை யகத்துத் தலைச்சங்கத்து" என்று அடியார்க்குநல்லார் உரைத்ததனானும், அகத்தியத்தை யிலக்கணமாகக் கொண்டாராய்ந்த முதற்சங்க மிருந்தகாலம் ஆதிகற்பத்திற் கிருதயுகத்துப் பிற்பகுதியென்க. அகத்தியம், தொல்காப்பிய மென்னு மிரண்டனையு மிலக்கணமாகவுடைய இடைச்சங்க மிருந்தகாலம் ஆதிகற்பத்தில் திரேதயுகத்து முற்பகுதியென்க.என்னை? "இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்து இடைச்சங்கத்து"என்று அடியார்க்கு நல்லார் உரைத்ததனானும், இச்சங்கலக்கணங்களுள் ஒன்றாய தொல்காப்பியம் வாதராயண முனிவர்தோன்றி வேதந் துறைசெய்த காலத்திற்கு முன்னரேயே செய்யப்பட்டுள்ளது என்பது போதரத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிர வுரைக்கண் "இவர் இந்நூல்செய்த

டொகுதியவாகச்சேர்த்துப் பதிப்பித்தனன். சேர்க்கப்பட்ட சொற்கள் மிகச் சிறிதுகாலத்துட்சேர்க்கப்பட்டமையால் அகரவரிசையாக வைத்தற் கிடனில தாயிற்று. இன்னுஞ்சேர்க்கவேண்டிய சொற்களும் பொருள்களும் அநந்தமுள. முக்கியமாயபொருள் தொகையகராதிகளிற் பற்பல அரியவிடயங்களை நுழைத் தமையாற் பெரிதாக்கொள்வர் அறிதாக்கற்றோர். நூதனமாகச்சேர்க்கப்பட்ட வைகளுக்கு * இக்குறி யமைக்கப்பட்டிருக்கின்றது. அவைகளை யெண்ணிப் பார்க்குமிடத்து அநேகாயிரஞ் சொற்களாகத் தெரியவரும். இதற்குமுன் வித்தியாரத்நாகர அச்சியந்திரசாலையில் என்னுடைய சொற்களும் விடயங்களுஞ் சேர்த்துப்பதிப்பிக்கப்பட்ட அகராதியொன்றுளது. அதனால் எனக்கும் எனது ஆப்தர்களாய் விளங்கும் வித்துவசிரோமணிகளுக்கும் நேர்ந்தமை விசனிக்கத் தக்கதேயாம். என்னெனில் எனக்கும், அவர்க்கும், நடுநிலைகொண்ட எமது காருணிய அரசாங்கத்தார்க்கும், உலகர்க்கும் ஒப்பில்லாத சிலசெய்கைகளை அவ்வித்தியா ரத்நாகர அச்சியந்திர சாலையார் செய்தமையேயாம். அவைகளை யெல்லாம் எடுத்தெழுதல் எனக்குப்பிரியமன்று. என்னெனில் ஒருவரது சிறப்புக்களை யெடுத்துச் சொல்லுதலன்றி, அவரது சிறுமைகளை யெடுத்துக் கூறுதல் தகுதியன்றென்பது விதியாதலாலென்க. எனது சுதந்தரப் பாதுகாப்பிற்காக(Title Page)நூலின் முகவேட்டில் (Registered Copy Right) என்று ரிஜிஸ்டர் செய்வதற்காக இடப்பட்டுப் பதித்ததைநீக்கி, எனக்குநட்டம்வருவிக்குமாறு என்னுத்தரவில்லாமல் அதனைத் தங்களிஷ்டப்படி பதித்துச்சேர்த்து விற்பாராயினர். இவ்வுண்மைகளை யெல்லாம் அறிந்த பாயிரமளித்த வித்வசிகாமணிகள், இந்நூலையத்தில் இங்ஙனம் நேர்ந்ததற்காகத் தாங்கள் அநுதாபமுறுவதாகவும், நடந்ததைப் பிராட்டியாமோ வென்று உலகராற் புகழப்படத்தக்க மாட்சிமையயுடைய இந்தியா சக்கிரவர்த்தினியார் ஆகிய விக்டோரியா பெருமாட்டியாரது நீதியரசாட்சி நிலைத்த இக்காலத்தும் இவ்வநியாயம் நடக்குமோவென்றும் விசனித்தனர். இவற்றை யெல்லாம் எங்கணும் வியாபியாயிருந்து, அவ்வவரது மெய்மை, பொய்மை, நன்மை தீமைகளை யெல்லாம் தாமாகவே யுணர்ந்து, அவற்றிற்கு ஏற்ற இன்பதுன்பங்களைக் கொடுத்தருளும் சர்வஞ்ஞத்துவ கிருபாநிதியாகிய பரமபதியே தக்கபயனளிப்பாராக. நிற்க, இக்குறைகளை யெல்லாம் நிவிர்த்திசெய்ய நினைந்து, பிருங்கிமாநகரம். வேளாளகுலமணியும், வேம்பிலிமுதலியார் குமாரரும், வித்வஜநாபிமானியும், நிரஞ்சனிவிலாச அச்சியந்திரசாலைத் தலைவரும் ஆகிய **நமசிவாயமுதலியார்** அவர்கள் பதிப்பித்தற்கு ஒப்புக்கொண்டு, பின்னரும் பல நூதன சொற்களையும், விடயங்களையும், தொகைப் பொருள்களையும், பெயர்விளக்கக் குறிப்புக்களையும், தத்துவவிலக்கணங்கள் பலவற்றையுந் தொகுத்துக்கொடுக்கப் பதிப்பித்து, ஷை பாயிரஞ்சொன்ன பண்டிதோத்தமர்களுக்கும் புத்தகங்களை யன்புடன் கொடுத்தபெருமை வியக்கற் பாலதே. இந்நன்றி மறக்கற் பாலதன்று, "அதிமதி நுட்பமோட திகலை கற்பினும் -விதியது வசத்தால் விதிவிலக் கயர்ப்பா-ராசையா லளவிட லரிதே யன்றியும்-சொல்லின் கூட்டமும் பொருளின் கூட்டமு-மவ்விரண்டனையு மளவிட

ப்படாவே-யிந்நால்வகையினு ளென்னுலியன்றன-சிறப்பாயுள்ள சிலதேடின னவை-மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்டன-னவன்கையி லகப்படாத டங்கின வவற்றுளுஞ்-சிறிதினைச் சிறியேன்சிறியசிரூர்தமக்-குரைத்தன னன் றியீதொருநூ லன்றே-யிவ்வழக் கறிந்தோ ரிகழுதல் வழக்கே-யிவ்வழக் கறி யாரிகழுதல் வழக்கே,, என்றதையநுவதித்து முடிக்கின்றனன்.

இங்ஙனம்,

நா. கதிரைவேற்பிள்ளை

யாழ்ப்பாணம்.

செந்தமிழ்ப் பரமாசாரியன் றிருவடிவாழ்க.



# அவையடக்கம்

கலிநிலைத்துறை.

நோய்க்குற்ற மாந்தர் மருந்தின்சுவை நோக்க கில்லார்
தீக்குற்ற காத லுடையார் புகைத்தீமை நோக்கார்
போய்க்குற்ற மெல்லாந் தமிழின்புகழ் கூற வேற்கென்
வாய்க்குற்ற சொல்லின் வழுவும் வழுவல்ல வன்றே. (க)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமேவு மரசரொடு குடிகளா னவருண்டு புனிதரொ டசுத்த ருண்டு
புண்ணியத் தருமகுண சீலரா மவருடன் புலைஞரும் புவியி லுண்டு
மாமேவு செல்வரொடு வறிஞரும் பலருண்டு வல்லகலை யறிஞ ரோடு
வண்டமிழ் தெரிந்திலா முழுமக்கள் சிலருண்டு மகிதலத் திவைவ ழக்கே
நாமேவு கவிஞர்தரு நன்னூலொ டென்னூலை யு நானிலத் துறலி ழுக்கோ
நடைபெற்ற விதனினுயர் முன்னூல் விளங்குமெனு நசையா னியற்ற லு
கார்மே வருந்தமிழ்க்கடல்குடித்தறுபுலவர்கற்றறி விலாதசிறியேன் [ற்றேன்
கைசெய்த சீரெனக் குணநாடி யல்லவை களைந்துகொளல் கடன தாமே.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

உத்தமர்க ளெந்நூலு முற்ற வார்ந்தே
யுறுகுறைகண் மறையவுண்மை யுகந்து கொள்வர்
மத்திமர்க ளவையிரண்டுஞ் சமமாக் கொள்வர்
மற்றையரா மதமருண்மை வகுக்க மாட்டா
ரித்தகையா லாய்ந்துணர்ந்த நல்லோர் கல்லே
னிசைத்தவக ராதியென விகழா ரென்றே
சித்தமிசை கொண்டுதெளி வில்லாப் பேதைச்
சிற்றறிவே னறிவளவிற் சேர்த்திட் டேனே. (௩)

அவையடக்கம் முற்றிற்று.

கடவுள் துணை.

# பெயரகராதி



அ - அஃறிணைப்பன்மையீறு, ஆறுவதன்பன்மையுருபு, சாரியை, சுட்டு, இன்மை, எதிர்மறை, குறைவு, சம்மதி, தடை, பிறிது, வியப்பு,இவற்றைக்காட்டுமோருபசருக்கம், எட்டென்னு மெண்ணின்குறி, ஓரெழுத்து, பெயரெச்ச வினையெச்சவிகுதிகள்.

அஆ - அதிசயவிரக்கக்குறிப்பு, விட்டிசை.

†அஃக-குறைய,சுருங்க,நுண்மையாக.

அஃகம்-தானியம்.

அஃகரம்-வெள்ளெருக்கு.

அஃகல்-குறைதல், சுருங்கல்.

அஃகான்-அ, முதலெழுத்து.

அஃகியஇ-குற்றியலிகரம்.

அஃகியஉ-குற்றியலுகரம்.

அஃகியஐ-ஐகாரக்குறுக்கம்.

அஃகியஔ-ஔகாரக்குறுக்கம்.

அஃகியதனிநிலை-ஆய்தக்குறுக்கம்.

அஃகியமஃகான்-மகரக்குறுக்கம்.

அஃகியவறிவு-கூர்மை, நுண்ணறிவு, விவேகம்.

அஃகுல்லி-உக்காரி,சிற்றுண்டி, பிட்டு.

அஃகுள்-அக்குள்.

அஃகேனம்-ஆய்தவெழுத்து, முள்ளில்லாப்பன்றி.

அஃது-அது.

அஃபோதம்-நிலாமுகிப்புள்.

அஃறிணை-இழிதிணை.

அகக்கடவுள் - ஆன்மா, உயிர்க்குள்ளிறைவன், மனம்.

அகக்கணு-அந்தப்பர்வகம்.

அகக்காழ்-ஆண்மரம், உள்வயிரம், வச்சிரக்கல்.

அகங்கரித்தல்-ஆங்காரங்கொள்ளுதல்.

அகங்கரிப்பு-மனவெறுப்பு.

அகங்களித்தல்-மனமகிழ்தல், மனமதர்த்தல்.

அகங்காரக்கிரந்தி - ஆணவமறைப்பு, மாயாபாசமும்மலத்தொடக்கு.

அகங்காரத்திரயம் - முக்கியவகங்காரம், முக்கியாமுக்கியவகங்காரம், அமுக்கியவகங்காரம் என மூன்று.

அகங்காரம்-அகந்தை, உட்கரணம் நான்கினொன்று, கருவம்,பிறவிக்குமூலம்.

அகங்காரி -அகங்காரமுடையது,காவி.

அகங்காழ்-அகக்காழ்.

அகங்கை-உள்ளங்கை.

அகசியம்-ஆசியம், வேட்கை.

அகசு-பகல், பொழுது.

அகசை-பார்வதி.

அகச்சுட்டு-சொல்லகத்து முதனிலையாயமைந்துநிற்குஞ்சுட்டு.

அகடம்-அநீதி,சித்தியாமை, பொல்லாங்கு.

அகடவிகடம்-அபாயம், இரண்டகம், தட்டுமாற்று, வஞ்சகம், *குறும்பு.

அகடனம்-கேடு, செய்யப்படாதது.

அகடன்-துஷ்டன்.

அகடியம்-அநீதி.

அகடு-உள், சீர், நடு, பொல்லாங்கு,மேடு, வயிறு.

அகடூரம்-கொடுமையின்மை.

அகடேரி-பாம்பு.

அகட்டுத்தே-விநாயகன்.

அகணி-உள், கடுக்காய், சுக்கிரப்புரணி,நஞ்சு,தெங்கு,பனை முதலியவற்றினார், நஞ்சு, மருதநிலம், வயல்.

அகணிதபஞ்சாங்கம்-அலகிடாது சொல்லும் பஞ்சாங்கம்.

அகணிதபஞ்சாங்கி-கணியாதுபஞ்சாங்கஞ்சொல்வோன்.

பட்ட வியற்பெயர்க்கோடாமையாம்.
அகப்புறப்பெருந்திணை - அகன்றழிக் கலம்கன்முதலாகத் தலைவியுந்தானு ம்வளமடைந்நுநோற்றலீறாகச்சொ ல்லப்பட்டனவும்பிறவுங்கூறுதலாம்
அகப்புறப்பொருள் - கைக்கிளையும்பெ ருந்திணையும்.
அகப்புறம்-கைக்கிளையும் பெருந்திணை யும் அவை-அகாந்தன், வள்ளி, சுர நடை, முதுபாலை, தாபதம், தபுதா ரம், குற்றிசை, குறுங்கலி, இல்லா ண்முல்லை, பாசறைமுல்லை, என்னு ம்பத்து அநுபவங்கள்.
அகப்பேய்ச்சித்தன்-ஓர்கவி.
அகப்பை - சட்டுவம், இதுதட்டகப் பை, சாந்தகப்பை, சிற்றகப்பைஎன மூன்றுவிதம்.
அகப்பொருட்கோவை-ஓர்பிரபந்தம்.
அகப்பொருள் - ஓரிலக்கணம், அஃது உண்ணிகழ்ச்சியான சிற்றின்பத்திற் குரிய வெழுதிணையைக்கூறும்.
அகமகிழ்ச்சி-ஆனந்தம், மனமகிழ்ச்சி.
அகமரம்-வெள்வேலமரம்.
அகமம்-மரப்பொது, மலை.
அகமருஷணம் } நீர்க்குணின்றுசெய்
அகமருடணம் } யுமோர்செபம்.
அகமருடணதீர்த்தம் - ஷை செபம் சொல்லிச்செய்யும் ஸ்நானம்.
அகமலர்ச்சி-அகமகிழ்ச்சி.
அகமார்க்கம்-அருமையிற்பாடல்.
அகமுடையான்-வீட்டுக்காரன்.
அகம்-ஆகாயம், ஆழம், ஆன்மா, இட ம், உபத்திரவம், உள், உள்ளிடம், எழுவுருபு, ஓர்மரம், குணகுணம், சூ ரியன், தானியம், துக்கம், பள்ளம், பாம்பு, பாவம், பூமி, மரப்பொது, மலை, மனம், வீடு.
அகம்படியார்-உள்வேலைக்காரர், ஓர்சா [தியார்.
அகம்பிரமம் - ஆங்காரம், நானேபிரம மெனல்.
அகம்மதி-அறியாமை, தற்பிரியம்.
அகம்மியம் - பத்திலட்சங்கோடி கோ டிகோடாகோடி, ஓவெண்.
அகம்மியை-பொதுமகள்.
அகராம் - இரதம், எழுத்தின்சாரியை, ஓரெழுத்து, பார்ப்பனச்சேரி, மருத நிலத்தூர், வீடு.
அகராதி-அகரமுத லெழுத்துக்களா ற்றொடங்குஞ் சொற்கோவை.
அகரிஷணம்-துக்கம், வெறுப்பு.
அகரு-அகில்.
அகருதம்-வீற்றிருத்தல்.
அகர்த்தத்துவம்-அழிக்குந்தத்துவம்.
அகர்த்தனன்-குள்ளன்.
அகர்த்தா - செய்கையற்றவன், பஞ்ச கோசங்கட்கன்னியன்.
அகர்த்தியம்-கிருத்துவம்.
அகர்ப்பதி-சூரியன்.
அகர்மகர்த்தரிப்பிரயோகம் } செயப்
அகர்மகர்த்துருப்பிரயோகம் } படுபொருள்குன்றியவினை.
அகர்முகம்-உதையகாலம், வைகறை.
அகர்ம்மணி } உதையகாலம், வைக
அகர்ம்முகம் } றை.
அகலக்கட்டை-அகலமற்றது.
அகலம்-தரவை, மார்பு, விசாலம், விரிவு.
அகலர்-சண்டாளர்.
அகலல்-நீங்கல், விரிதல், விருத்தித்தல்.
அகலவுரை விரித்துரை, அஃது இலக் கணமும் இலக்கியமு மெடுத்துக்கா ட்டிப் பொருள் விரித்துரைக்கும் விரித்துரை.
அகலறை-பாசறை, மலைப்பக்கம்.
அகலிகை - கௌதமர்பத்தினி, பஞ்ச கன்னிகைகளி லொருத்தி, இவளை தேவேந்திரன் மோகித்து கௌதம ரை வஞ்சகமாய் ஸ்நானத்துக்குப் போக்கிப்புணர, கௌதமரறிந்துகல் லாய்ச்சபிக்க, இராமர் விஸ்வாமித் திரரோடு மிதிலைக்குப் போம்போத வர் காற்றூசுபட சாபவிமோசன மானாள்.
அகலிடம்-பூமி.
அகலியம்-ஓர்மரம், மரப்பொது.
அகலுதல்-அகன்றுபோதல், நீங்குதல், விரிதல்.
அகலுள்-அகலம், ஊர், நாடு, பெருமை,
அகல்-அல்குல், சட்டி, தகழி, நீங்கல். நீங்கென்னேவல், பிரிதல், பெருமர ம், விசாலித்தல், வெள்வேலமரம்.
அகல்கை-அகலல்.
அகல்வு-அகலம், அகலல்.
அகல்வோர்-ஈனர்.
§ அகவ-ஒலியாநிற்க.

அகவர்-அழைத்துப்புகழ்வோர், சூதர்.
அகவலுரிச்சீர்-ஈரசைச்சீர்.
அகவலோசை - ஆசிரியப்பாவிற்குரிய வோசை.
அகவல்-அழைத்தல், ஆசிரியப்பா, ஆடல், ஒருசந்தம், மயிற்குரல்.
அகவற்சீர்-அகவலுரிச்சீர்.
அகவற்சுரிதகம்-ஆசிரியச்சுரிதகம்.
அகவற்பா-ஐந்துபாவினொன்று, அது நாற்சீரான்வருமளபடியாயும் இயற்சீர்பயின்றும் அயற்சீர்விரவியுந்தன்றளைதழுவியும் பிறதளைமயங்கியுங்கருவிளங்கனி கூவிளங்கனியென்னு மிருசீர்கலவாது மூன்றுமுதலியபல வடிகொண்டு முடிவது.
அகவற்றுள்ளல்-வெண்டளையுங் கலித்தளையும் விரவிவருவது.
அகவற்றூங்கல்-ஒன்றாத வஞ்சித்தளையான்வருவது.
அகவாட்டி-மனையாள்.
அகவிதழ்-உள்ளிதழ்.
அகவிலை-தானியவிலை.
அகவு-அமுக்கரு.
அகவுதல்-அழைத்தல், ஆடல்.
அகவை-உட்பொருள், வயது.
அகழானெடுத்தல்-தோண்டுதல், எலிகளைப்போல வளையுண்டாக்கி மணலைப் புறம்பே தள்ளுகிறது.
அகழான்-ஓரெலி, வயலெலி.
அகழி-அகழ், மதில்சூழ்கிடங்கு.
அகழெலி-அகழான்.
அகழ்-அகழி, தோண்டென்னேவல்.
அகழ்தல்-உழுதல், தோண்டல்
அகளங்கமூர்த்தி-கடவுள், புத்தன்.
அகளங்கம்-சீதாங்கபாஷாணம், சுத்தம்.
அகளங்கன்-ஓர்சீமான், கடவுள், புத்தன், மாசிலான்.
அகளம், அகளி } தாழி, நீர்ச்சால், மிடா.
அகறல்-அகலல், அகலுதல், கடத்தல்
அகற்றுதல் - அகலப்பண்ணுதல், துரத்துதல், விரித்தல்.
அகனம்-கனமில்லாதது, பெருமையின்மை.
அகன்மகத்திருப்பிரயோகம் - செயப்படுபொருளிலாவினை, (உ-ம்) நடந்தான்.

அகன்மணி-தெய்வமணி.
அகன்றில்-ஆணன்றில்.
அகன்னம்-செவிடு.
அகாசரம்-அறியாமை.
அகாடி - புரவி முன்னங்கால் கயிறு, முன்.
அகாண்டபாதசாதம்-சாதமரணம்.
அகாதத்துவம்-ஆழம்.
அகாதப்படுஞ்சமயம்- பிரமாதமாகுஞ்சமயம்.
அகாதம்-ஆழம், தொலை, நீந்துபுனல், நீர், பள்ளம், மூங்கு, வஞ்சகம்.
அகாதன்-வஞ்சகன்.
அகாதிதம்-பட்சித்தல்
அகாத்தியம்-பொல்லாங்கு, வஞ்சனை.
அகாத்துமசை-பார்வதி.
அகாயு-சக்தி, காகம், பாம்பு, பாவி.
அகாரணம்-காரணமின்மை, தற்செயல்
அகாரணன் - ஏதுவில்லான், கடவுள்.
அகாரத்திரவியத்தை - பஞ்சாக்கரவித்தைகளினொன்று.
அகாரம்-ஓரெழுத்து, வீடு.
அகாரி-இடி, இந்திரன், கடவுள்.
அகாரியம்-காரியமற்றது, துர்செய்கை.
அகாலமிருத்து-அநியாயமரணம்.
அகாலம்-அவகாலம், நியமமல்லாதகாலம், பஞ்சகாலம்.
அகி-இராகு, இரும்பு, ஈயம், ஓர்வகைமரம், ஓர்வான்மீன், சூரியன், பகைவன், பாம்பு, பிரயாணி, வச்சிராயுதம், விருத்திராசுரன்.
அகிகாந்தம்-காற்று.
அகிதை-இலவு, பட்டுப்பருத்தி.
அகிஞன்-தரித்திரன்.
அகிஞ்சனன்-தரித்திரன், பரமயோகி.
அகிதம்-இதமின்மை, உரிமையின்மை, நியானம், தீமை, பகை, போசனம்,
அகிதர்-பகைவர்.
அகிபதி-ஆதிசேடன், சேடன்.
அகிபுஜம்-கலுழன், மயில்.
அகிபேனம்-அவின், பாம்பினஞ்சு.
அகிமால்-வெள்ளைல்.
அகிரன்-சூரியன், தீ.
அகிருதம்-முற்றுவேலை.
அகிருதித்துவம்-அந்தக்கேடு.
அகிருத்தியம்-அக்கிரமம், தப்பானசெய்கை.

அகிர்-அசர், தலைச்சுண்டு.
அகிலம்-எல்லாம், பூமி.
அகிலரூபன் - எல்லாமானோன், கடவுள்.
அகிலாண்டகோடி - கணக்கற்ற லோகம்.
அகிலாண்டம் - சர்வாண்டம், பூவண்டம்.
அகிலாண்டவல்லி - பார்வதி
அகில்-அகரு, ஓர்மரம், பஞ்சவிரையி னொன்று.
அகிவைரி-கருடன், மயில்.
அகிற்குறடு - அகிற்கட்டை.
அகிற்கூட்டு-ஏலம், கருப்பூரம், காசுக்கட்டி,சந்தனம்,தேன்சேர்ந்தகூட்டு
அகீசன்-அகிபதி.
அகீர்த்தி-துற்கீர்த்தி.
அகுடம்-கடுகுரோகிணி.
அகுட்டம்-மிளகு.
அகுணம்-இலட்சணமின்மை, குணமின்மை, குறைவு, துற்குணம்.
அகுணி-குணமில்லாதவன், மூடவன்.
அகுதி-அகதி.
அகுப்பியம்-பொன், வெள்ளி.
அகும்பை-கவிழ்தும்பை.
அகுவி-நறுவிலி.
அகுலீனம்-குலவீனம்.
அகுளுதி-வேம்பு.
அகூடகந்தம்-பெருங்காயம்.
அகூபாரன்-ஆதிகூர்மம்.
அகேசன்-மொட்டையன்.
அகேது-முகாந்தரமின்மை.
அகைத்தல்-அடித்தல்,அறுத்தல் உயர்த்தல் எழுச்சி, ஒடித்தல்,செலுத்தல் முறித்தல்-வருத்துதல்.
அகைப்பு-அடி, அறுத்தல், எழுச்சி.
அகைப்புவண்ணம் அறுத்தறுத்தொழுகும்வண்ணம்.
அகைமம்-புல்லுருவி.
அகோ-அதிசயச்சொல்.
அகோசரம் - அறியொண்ணமை, காணப்படாமை.
அகோடம்-கழுகு
அகோதாரை-மிகப்பொழிதல்.
அகோத்திரம்-குலமின்மை, கோத்திரமின்மை.
அகோபிலம் - கடப்பை பஜில்லாவில் விஷ்ணுவாலயங்களில் பேர்போன ஓர்ஸ்தலம்.
அகோரம்-உக்கிரகம், உட்டணம், கொடுமை, சிவனைம்முகத்தொன்று, நரி.
அகோராத்திரம் - பகலிரா, பகலுமிரவும்
அகோரை-உட்டணநாள்.
அக்ககனனம்-அட்சகிரகை.
அக்கசாலை - அணிகலன்செய்யுமிடம், கம்பட்டசாலை, கம்மாலை.
அக்கசாலையர்-கம்மாளர், தட்டார்.
அக்கட-அவ்விடம்.
அக்கடி-அலைவு, இடைஞ்சல்,வருத்தம்
அக்கணம்-அந்தட்சணம், பொரிகாரம் வெண்காயம்.
அக்கணு-தான்றிமரம்.
அக்கண்டே-அக்காளே.
அக்கதம்-அட்சதை, பங்கப்படாதது,பழுதின்மை.
அக்கதயோனி-கன்னி.
அக்கதூர்த்தன்-அத்தநாசஞ் செய்வோன்.
அக்கதேவி-சோலைப்புல்லு.
அக்கதை-அட்சதை.
அக்கந்தம்-தான்றிமரம்.
அக்கந்து-நெற்குவைப்புறத்து விலக்கியபதர், புறக்கந்து.
அக்கபாடம்-மற்களரி.
அக்கப்பாடு-நிலையழிவு மரக்கலச் சேதம், மோசம்.
அக்கபிரம்-மாமரம்.
அக்கமணி-உருத்திராட்சம்.
அக்கமம்-பொறுமை.
அக்கமாலை-உருத்திராட்சமாலை.
அக்கமூன்றி-கண்.
அக்கம்-அருகு, ஆன்மா, உப்பு, உருத்திராட்சம், ஓர்நிறை, கண், கயிறு, சில்லு, சொக்கட்டான்காய், ஞானம், தானியம், தானியவிலை, தான்றி துரிசு, தேருருப்பு,தேர்,பக்கம், பாம்பு, பூகோளாட்சம், பொன், வழக்கு.
அக்கரச்சுதகம்-ஓர்மிறைக்கவி.
* அக்கரத்தான்-தான்றி.
அக்கரம்-ஆகாயம், எழுத்து,ஓர்நோய், பிறவியறுத்தல், மா, வெள்ளெருக்கு.
* அக்கரம்மா-வெள்ளெருக்கு.
அக்கரவிலக்கணம்-எழுத்தியல்பு, கலைஞானமறுபத்துநான்கிலொன்று.
அக்கரன்-சிவன்,திருமால்,பிரமம்.

அக்காகாரம்-ஓர்பூண்டு.
அக்கராந்தம்-எழுத்தொலி.
அக்கராரம்பம்-எழுத்துப் பயிலவைத்தல்.
அக்கரை-அவசியம், காரியம், குற்றம்.
அக்கவாடம்-மற்களரி
அக்களித்தல்-மனமகிழ்தல்.
அக்களிப்பு-மனமகிழ்ச்சி.
அக்கன்-கருடன், குருடன், நாய்.
அக்கா-தாய், முன்பிறந்தாள்.
அக்காகிரம் - பண்டியச்சு, பண்டியன்முற்பக்கம்.
அக்காதேவி-மூதேவி.
அக்காத்தான்-தான்றி
அக்காரம்-கருப்புக்கட்டி, கரும்பு, சருக்கரை, சீலை, மாமரம்.
அக்காளன்-வனப்புல்.
அக்காள்-தமக்கை.
அக்கி-அக்கினிகரப்பான், அக்கிபுறப்பட்டவன், உட்டணம், ஓர்நோய், ஓர்பூச்சி, கண்.
அக்கிக்கல்-ஓரிரத்தினம்.
அக்கிதாரை-கண்மணி.
அக்கிபடலம்-கண்ணோயுளொன்று.
அக்கியாதம்-மறைவு.
அக்கியாதவாசம்-மறைந்திருத்தல்.
அக்கியாதி-துற்கீர்த்தி, நுனிக்கை.
அக்கியானம்-அறிவின்மை, ஞானமின்மை.
அக்கியானி-அறிவீனன், ஞானமில்லாதவன்
அக்கிரகரம்-நுனிக்கை, வலக்கை
அக்கிரகாரம்-தலைச்சேரி, பிராமணவீதி
அக்கிரசங்கை-முன்னுடை, அதாவது ஒருகூட்டத்தாரில் தலைவனுக்குச்செய்யும்மரியாதை.
அக்கிரசந்தானி-நமன்கணக்கு.
அக்கிரசம்பாவனை-முதன்மரியாதை.
அக்கிரசர்மம்-நுனித்தோல்.
அக்கிரசன்-தமையன், பிராமணன், மூத்தோன்.
அக்கிரசன்மன் - அண்ணன், பிரமன், பிராமணன்.
அக்கிரசாதகன், அக்கிரசாதி - பார்ப்பான்.
அக்கிரதை-தமக்கை, மூத்தாள்.
அக்கிரதாம்பூலம்-முதற்றாம்பூலம்.

அக்கிரக்கிரகணம்-முன்னெடுத்தல்.
அக்கிரபாகம் - நுனி, முதற்பங்கு, முன்பக்கம்.
அக்கிரபாணி-வலதுகை, வலக்கை.
அக்கிரபூசனை - பிரதானமானவனுக்குமுதலிற் கடவுளுக்குச்செய்யும்பூசை.
அக்கிரபூசை-முதன்மையர்ப்பூசை, முதன்மையுபசாரம்.
அக்கிரமம்-அநீதம், ஒழுங்கின்மை, கொலை.
அக்கிரமாமிசம்-இருதயமாமிசம்.
அக்கிரமி-கொடியவன்.
அக்கியம் - அதிகம், இலாபம், எதிர், சரியம், நுனி.
அக்கிரம் - கட்டைத்திரளாகவிருத்திக்கிடிய கஸ்ரீப்பேன்னிதிகைதம்.
அக்கிரவருணம்-உயர்ந்தசாதி.
அக்கிரன்-தலைமையன்.
அக்கிராசனம்-அக்கிராசனம்
அக்கிராசனாம்-சேனைமுனைத்தலைவிய ம், இடைவிடாஅப்பியாசத்தியம்.
அக்கிராதம்-கோடாம்பலம்.
அக்கிராத்தம்-கைநுனி, வலக்கை.
அக்கிராக்தம்-செம்பு.
அக்கிராரம்-அக்கிரகாரம், விளைநிலம்.
அக்கிரியன்-தமையன்.
அக்கிரு-விரல்.
அக்கிரோவனம்-காட்டோரம்.
அக்கிலு-நெருஞ்சில்.
அக்கிள்-கைக்குழி.
அக்கினி-கொடிவேலி, செங்கொடிவேலி, சவ்வர்க்காரம், நெருப்பு, பித்தன், பொன், மூத்திரம், மூலாக்கினி, வெடியுப்பு.
அக்கினி - ஆயுருக்வேதாக்கினி, வேதாக்கினி, காலாக்கினி என மூன்றுவிதம்.
அக்கினிகணம் - தீப்பொறி, தீமைக்கிரைக்கணம்.
* அக்கினிக்கயம்-சடலக்குளம்
அக்கினிகருப்பம்-கடலுப்பு, சூரியகாந்தம், பொதி.
அக்கினிகருப்பன்-குமரன்.
அக்கினிகலை-கவாசம்.
அக்கினிகோணம்-தென்கீழ்.
அக்கினிகோத்திரம்-தீ, நெய், யாகவிருபத்தொன்றிலொன்று.
அக்கினிக்கட்டு - அக்கினித்தம்பனம்.

அக்கினிகபம்-கடல்நுரை.
அக்கினிக்கர்ப்பம்-அக்கினிக்கருப்பம்.
அக்கினிக்கண்ணன் - ஈசுவரன், பயங்கரரூபன்.
அக்கினிக்குமரம் - குளிர்மை, மந்தம் முதலாகிய நோய்கட்குக், கொடுக்கப்படுமருந்து.
அக்கினிக்குமரன்-ஓர்வகைமாத்திரை, சுப்பிரமணியன்.
அக்கினிசகன்-காற்று.
அக்கினிசன்மன்-குமரன்.
அக்கினிசாந்தி-ஓமம்.
அக்கினிசாலம்-ஓர்பூடு. நெருப்புச்சாலம்
அக்கினிசிகம்-அம்பு, வாணம், விளக்கு
அக்கினிசேகரம்-மஞ்சள்.
அக்கினிச்சிலம் - கார்த்திகைக்கிழங்கு.
அக்கினிச்சிவம்-குப்பைமேனி
அக்கினிச்சுவாலை-தீக்கொழுந்து.
அக்கினிச்சேர்வை-புண்ணுச்சும் பிளாஸ்திரி.
அக்கினிட்டோமம் } சோமயாகம்.
அக்கினிஷ்டோமம் }
அக்கினித்தம்பம் } ஓர்வித்தை, கலைஞானமறுபத்துநான்கினொன்று, நெருப்புத்தூண்.
அக்கினிஸ்தம்பம் }
அக்கினித்தம்பன்-சிவன்.
அக்கினித்தம்பனம்-நெருப்புச்சுடாமற்செய்யும்வித்தை.
அக்கினித்திராவகம்-ஓர்திராவகநீர்.
அக்கினித்திரேதை-திரியாக்கினி.
அக்கினித்தூண்-தீப்பிழம்பு.
அக்கினிநட்சத்திரம்-கொடியநட்சத்திரம்.
அக்கினிநாள்-கொடியநாள்.
அக்கினிபஞ்சகம்-அக்கினியபாயம்.
அக்கினிபரிசுதம்-ஓமோபகரணம்.
அக்கினிபரீட்சை - மழுவேந்தன் முதலியவித்தை.
அக்கினிபீசம்-பொன்.
அக்கினிபூ-அக்கிசன்மன்.
அக்கினிபோஷணம் - வைசுவதேவபூசை.
அக்கினிபிரத்தரம்-தீக்கல்.
அக்கினிப்பிழம்பு-நெருப்புச்சுவாலை.
அக்கினிப்பீனப்பு-எரிமலை.
அக்கினிமணி-சூரியகாந்தம்.
அக்கினிமண்டலம் - மும்மண்டலத்தொன்று, அதுமூலாதாரமுதனுபிக்கமலமளவும், அடிவயிறு.
அக்கினிமாந்தம்-ஓர்நோய்.
அக்கினிமாந்தியம் - அசீரணம், செரியாமை.
அக்கினிமாருதி-அகத்தியன்.
அக்கினிமுகம்-சேங்கொட்டை.
அக்கினிமுகன்-பிராமணன், தீ, தேவன்
அக்கினிமூலை-தென்கிழக்குமூலை.
அக்கினியாகாரம்-ஓமசாலை.
அக்கினியாதானம் - ஓமாக்கினிவளர்த்தல்.
அக்கினியாதேயம்-நித்தியதீவளர்த்தல், யாகமிருபத்தொன்றினொன்று.
அக்கினியாலயம்-அக்கினியாகாரம்.
அக்கினியின்குணம்-ஆலசியம், தாகம், நித்திரை, பசி, மைதுனம்.
அக்கினியின்கோபம்-பித்தம்.
அக்கினியுற்பாதம்-விண்வீழ்கொள்ளி.
அக்கினியோகம்- அக்கினிக்குரியயோகம், தக்தயோகம்.
அக்கினிலிங்கம்-புகை.
அக்கினிவகை-கமாலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி, சாடராக்கினி, சடராக்கினி, தாபாக்கினி, உஷ்ணம், காங்கை.
அக்கினிவமிசக்ஷத்திரியா-வன்னியர்.
அக்கினிவருத்தனம்-தீவளர்த்தல்.
அக்கினிவல்லபம்-கீல்.
அக்கினிவாகம் } புகை.
அக்கினிவாகு }
அக்கினிவிசர்ப்பம்-விரணக்கொதி.
அக்கினிவீசம் } பொன்.
அக்கினிவீரியம் }
அக்கு-அகில், கண், எட்டி எருத்துத்திமில், எலும்பு, சங்கு, சங்குமணி, பலகறை, உகாக்காய். [யம்.
அக்குத்து-சந்தேகம், பொருத்தம், மை
அக்குரன் - இடையெழுவள்ளலிலொருவன்.
அக்குருக்கி-சயரோகம்.
அக்குரூரன்-கஞ்சன் முதன்மந்திரி.
அக்குல்லி-உக்காரி, சிற்றுண்டி பிட்டு.
அக்குள்-கக்கம்.
அக்குரோணி-படையிலோர் தொகை அஃது அனிகமூன் [illegible]
அக்கை-அன்னை, முன்பிறந்தாள்.

அக்கோ - அதிசயச்சொல், இரக்கச்சொல்.

அக்கோடகம் } கடுக்காய்.
அக்கோடம் }

அக்கோணி - பத்துநூறாயிரத் தொன்பதினாயிரத்துமுந்நூற்றைம்பது காலாளும், அறுபத்தையாயிரத்து அறுநூற்றறுபது குதிரையும், இருபத்தையாயிரத்து எண்ணூற்றெழுபது இரதமும், இருபத்தோராயிரத்து எண்ணூற்றெழுபது யானையுங்கொண்டது.

அக்கோபம்-உறுதி, யானைகட்டுந்தூண்

அக்கோலம் - தேற்றாங்கொட்டை, தேற்றாமரம்.

அக்கௌகிணி-அக்கோணி.

அங்ககம்-அங்கம்.

அங்ககாரம்-அங்கசேட்டை, அபிநயம்.

அங்கசங்கம்-புணர்ச்சி.

அங்கசம்-உதிரம், உரோமம், காமம், நோய்.

அங்கசன்-மகன், மன்மதன்.

அங்கசாதனம்-ஓர்குறி.

அங்கஜாரி-சிவன்.

அங்கசாலைக்காரன் - கிராமப்பணிசெய்வோன்.

அங்கணம்-ஆகாசம், சலதாரை, சேறு பொரிகாரம், மதகு,முற்றம், வெண்காரம், பத்துமுழத்தளவு, கடுக்காய்மரம், இரண்டுதூணுக்கும் நடுவிலுள்ள விடம்.

அங்கணன் - அருகன், சிவன், மிருதபாஷாணம், விட்டுணு.

அங்கணி-கற்றாழை, காளி, பார்ப்பதி.

அங்கண்-அவ்விடம்.

அங்கதம்-தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், மார்பு, யானையுணவு,

அங்கதன் - பரதன்மகன், வாலிமகன்.

அங்கதி-கொடை, தீ, நோய், பார்ப்பான்,பிரமா, வாயுவிட்டுணு.

அங்கதை-தென்றிசையானைக்குப் பெண்யானை.

அங்கத்தி-பண்டாரங்களை மரியாதையாகக்கூப்பிடும் தாங்களென்னுமர்த்தத்தையுடைய ஓர்சொல்.

அங்கநியாசம் - அநுட்டான முறையிலொன்று, அது,உடம்பின் ஒவ்வொருபாகத்தையுந் தொட்டு மந்திரம் சொல்லுதல்.

அங்கபடி-அங்கவடி, கவிகை, குதிரையங்கபடி.

அங்கபாலி } கட்டித்தழுவுதல்.
அங்கபாலிகை }

அங்கப்பிரதக்கணம் } சரீரத்தாலுருண்டுவலம்வருகை.
அங்கப்பிரதட்சணம் }

அங்கமாலை-ஓர்பிரபந்தம், இது,ஸ்திரீகளின்முகம்,கண், ஸ்தனமுதலியவற்றையும், புருஷரின் தோள்,மார்புமுதலியவற்றையும் வர்ணிக்கும் நூல்.

அங்கம்-அடையாளம், அவயவம், உடல், உபாயம், உறுப்பு, எலும்பு, ஓர்தேயம், அதற்கு இப்போது பாகல்பூர் என்னும்பேர், கங்காநதிதீரத்தில் வங்காளக் கீழ்மாகாணங்களிலோர்பாகம், கட்டில், சாயல், பதினெண்பாடையிலொன்று,பாவனை, வேதாங்கம், அத்தியாயம்,அலங்கரிப்பு, ஆறங்கம், ஓர்விளையாட்டு, குற்றம், சமீபம், தங்குமிடம், தானப்பிரமாணம் பத்திலொன்று, பந்து, பரதவுறுப்புளொன்று, மனம், வரி,கொன்றை, கோளகபாஷாணம்.

அங்கயற்கண்ணம்மை-மீனாட்சி.

அங்கயோகம்-யோகமெட்டிலொன்று.

அங்கரக்கா-மெய்ச்சட்டை.

அங்கரங்கம்-உலகின்பம்.

அங்கரட்சணி-யுத்தகவசம்.

அங்கரட்சா-அங்கரக்கா.

அங்கரமாதி-கௌரிபாஷாணம்.

அங்கரவல்லி-குறிஞ்சா.

அங்கராகம்-பூசும்பரிமளம்.

அங்கருகம்-உரோமம்.

அங்கர்-அங்கதேசத்தார்.

அங்கர்கோமான் - அங்கதேசத்தரசன், கன்னன்.

அங்கலாய்ப்பு-துக்கம்-பொறாமை.

அங்கவடி-அங்கபடி.

அங்கவம்-பழவற்றல்.

அங்கவன்-மிருதபாஷாணம்.

அங்கவிட்சேபம்-அபிநயம்.

அங்கவித்திசை-கணிதம்.

அங்கவியல்-இராசரிகமுறைமை.

அங்கவீனன்-குரூபி.

அங்களி-கற்முழை.
அங்கணம்-கடுக்காய்மரம்.
அங்கனுகணம்-மாதர்கூட்டம்.
அங்கனை - ஓரிராசி, பெண், வடதிசை யானைக்குப் பெண்யானை.
அங்கா-வாய்திறத்தல்.
அங்காடி-கடைவீதி.
அங்காதிபன்-கன்னன். [வுடம்பு.
அங்காதிபாதம்-ஓர்வைத்தியநூல், முழு
அங்காத்தல்-கொட்டாவிவிடல், வாய் திறத்தல்.
அங்காப்பு-அண்ணுத்தல், வாய்திறத்த
அங்காயி-அகித்தியம்,மிச்சம். [ல்.
அங்காரகம்-அங்காரம்.
அங்காரகன்-செவ்வாய், நெருப்பு.
அங்காரதாரை-ஓரரக்கி.
அங்காரதானிகை-சூட்டடுப்பு, தீச்சட்
அங்காரபரிபாசிதம்-பொரிக்கறி. [டி
அங்காரம்-கரி, தீ.
அங்காரவல்லி-குறிஞ்சா, சிறுதேக்கு.
அங்காரன்-அங்காரகன்.
அங்காரி-வெங்காரம்.
அங்காரிகை-கரும்பு.
அங்காவணம்-பஞ்சதருவின்பந்தர்.
அங்காளி-அங்காளம்மை.
அங்கி-அக்கினிதேவன், அங்கத்தையு டையது, அத்தநாள், கார்த்திகைந ட்சத்திரம், சடராக்கினி,சட்டை,தீ
அங்கிகரித்தல்-ஏற்றுக்கொள்ளுதல், த ழுவிக்கொள்ளுதல்.
அங்கிகரு-சாதிலிங்கம்.
அங்கிகாரம்-அங்கிகரித்தல்.
அங்கிகை-கஞ்சுகம், ரவிக்கை.
அங்கிசம் - உபநிடத முப்பத்திரண்டி னென்று, கூறு, பங்கு, வமிசம்.
அங்கிஷபாதி-சிறுபுள்ளடி.
அங்கிஷம்-வமிசம், வாழை.
அங்கிசை-அம்சை.
அங்கிடுதத்தி - நாடோடி, நிலைகெட் டவன்.
அங்கிடுதுடுப்பன்-நாடோடி.
அங்கிட்டோமம்-கோமேதகம்.
அங்கிதம்-உடற்றழும்பு, பாட்டுடைத் தலைவன்.
அங்கிநாள் - அத்தநாள், கார்த்திகை நாள்.
அங்கிரகம்-சரீரநோ.

அங்கிரன் - ஆங்கீரசன், சப்தரிஷிகளி லொருவன்.
அங்கிரர்-சப்தரிஷிகளிலொருவன்.
அங்கிரி-கால், மரமூலம், மூன்றுகாலி ருடி.
அங்கிரிநாமகம்-மரமூலம்.
அங்கினி-ஓர்விதச்சிற்முழை.
அங்கீகரணம் } சம்மதித்தல்.
அங்கீகரித்தல் }
அங்கீகாரம்-சம்மதி, வாக்குத்தத்தம்.
அங்கு-அவ்விடம், ஓரசைச்சொல்.
அங்குசகிரகன்-யானைப்பாகன்.
அங்குசதாரி-தாளகம், யானைப்பாகன், விநாயகன்.
அங்குசபாசதரன் } விநாயகன்.
அங்குசபாசமேந்தி }
அங்குசபாணி-காளி, விநாயகன், வீர பத்திரன்.
அங்குசபாதி-சிறுபுள்ளடி.
அங்குசபிசாரி-கொள்ளு.
அங்குசம்-தோட்டி, யானைத்தோட்டி, வாழை.
அங்குசரோசனம்-கூகைநீறு.
அங்குசவி-கொள். [ணம்.
அங்குசன் - காந்தம்,சரகாண்டபாஷா
அங்குசோலி-அறுகு.
அங்குட்டம்-துறப்பு.
அங்குஷ்டம் - அங்குட்டம், பாண்டுவி யாதி.
அங்குட்டம்-குறளுரு, பெருவிரல்.
அங்குஷ்டான் } விரலுறை.
அங்குட்டான் }
அங்குஸ்தான்-பெருந்தாரா.
அங்குரகம்-கூடு.
அங்குணம்-வெங்காரம்.
அங்குரம் - உரோமம், குப்பைமேனி, தளிர்,நங்கூரம்,நீர்,பூண்டின்முளை, முளை.
அங்குரார்ப்பணம்-முளையிடுதல்.
அங்குரி-விரல்.
அங்குரித்தல்-முளைத்தல்.
அங்குரீயம்-அங்குலியம்.
அங்குலம் - பெருவிரல், விரல், விரற் கடை.
அங்குலி - ஐவிரலிச்செடி, துதிக்கை நுனி,யானைக்குக்கட்டும்மணி,விரல்.
அங்குலிகம்-அங்குலியம்.

அசுவாந்தம்-அடிப்பு, மரணம், முடிவு, வியயம்.
அசுவபரி-அலரி.
அசுவபரிட்சை-அசுவபரீட்சை.
அசுவபரீட்சை-கலைஞான மறுபத்துநான்கினொன்று, அது குதிரையைப்பற்றியது.
அசுவமியம்-குதிரைப்பாதொணம்
அசுவமேதபருவம் - பாகவதத்திலோர் பிரிவு.
அசுவமேதம்-ஓர்யாகம்
அசுவமேதிகம் } அசுவமேதயாகத்திற்
அசுவமேதியம் } குப் பக்குவமான குதிரை.
அசுவம்-அமுக்கிராக்கிழங்கு, குதிரை, குதிரைப்பற்பாதொணம்.
அசுவலாபன்-குதிரைப்பாகன்.
அசுவாபரி-அலரி.
அசுவாமணக்கு-சிறுபூளை.
அசுவினி-அச்சுவினிநாள்.
அசுவை-அச்சுவினிநாள், அத்தாட்சியற்றது.
அசுழம்-நாய்.
அசூசம் } ஆசூசம், சூதகம்.
அசூசி }
அசூதி-பிறப்பின்மை, மலடி.
அசூயணம்-அசூயை-அவதூறு.
அசூயை-அவதூறு, பொறாமை,
அசூரி-வைசூரி.
அசூர் - ஜில்லாஉத்தியோகஸ்தர், சமூகம்.
அசூர்க்கச்சேரி-கலெக்டர்கச்சேரி.
அசேசதம்-முழுதும்.
அசேதனம்-அறிவின்மை.
அசேவனம் - அசட்டைபண்ணல், கீழ்ப்படியாமை, விலகுதல்.
அசேவை-அசங்கை, விலகல்.
அசை - அசைநிலை, அசையென்னேவல், அலகொன்றேனு மிரண்டேனுங் கொண்டுசீர்க்குறுப்பாய்வருவது, ஆட்டுமறி, இசைப்பிரிவு, இரைமீட்புச்ரகம், செய்யுளுறுப்பிலொன்று, சொல்லுருபு, பிரகிருதி, பெண், ஆடு, மாயை.
§ அசைஇ-இருந்து, இளைத்து, இளைப்பாறி, வருந்தி.
அசைஇய-ஓய்ந்த.
அசைஇயது-கிடந்தது.
அசைகபாதன் - பன்னொருருத்திரரி லொருவன்.
அசைசை-அசைவு, ஐயம்.
அசைச்சீர் - தளைகொளற்கிடனின்றி ஓரசையேசீராய்நிற்பது.
அசைச்சொல்-அசைநிறைக்குஞ்சொல்
அசைதல்-ஆடுதல், இருத்தல், உலாவல், கலங்குதல், சோம்பல், தங்கல், துவளல், பயப்படுதல்.
அசைதன்னியம்-அறியாமை, சடத்துவம், ஞானக்குருடு.
அசைத்த-கட்டிய.
அசைத்தல்-ஆட்டல், ஓசையெடுத்தல், கட்டல்.
அசைநிலை-அசைச்சொல்.
அசைநிலையோகாரம்-ஈற்றசை யோகாரம். (உ-ம்.) கேண்மினோ.
அசைபோடல்-இரைமீட்டல்.
அசைப்பருங்கல்-மலை.
அசைப்பு-அசைதல், இறுமாப்பு, சொல், சொல்லுதல்.
அசையடி-அம்போதரங்கம்.
அசையந்தாதி-அடி ஈற்றசைவருமடி முதலசையாகத்தொடுத்திருப்பது.
அசையாமணி-ஆராய்ச்சிமணி.
அசையிடல்-அசைபோடல்.
அசையு-அழுக்கிறு.
அசைவாடுதல்-அசைதல், உலாவுதல்.
அசைவு - ஆட்டம், ஓர்வகைத்தூக்கு, சலனம், சோர்வு, பெயர்ச்சி.
அசைவெட்டுதல்-இரைமீட்டல்.
அசோகதளிர்மணி-சௌந்திகப், பதுமராகமணி.
அசோகம் - ஒருமரம், சோகமின்மை, மன்மதன்கணை, மருது, வரிலோத்திரம், வாழை.
அசோகவனம்-வாழைவனம்.
அசோகன்-அருகன், மன்மதன்.
அசோகு - அசோகமரம், மருது, வரிலோத்திரம், வாழை.
அசோசம்-கவலையின்மை.
அசோணம் } குறட்டை, சவரி, சவரி
அசோண்டி } லோத்திரம்.
அசௌசம்-ஆசூசம், சூதகம்.
அசௌரியம்-வீரமின்மை.
அச்சகம்-நீர்முள்ளி.

